[7th March 1961

*Water-supply Scheme*

* 630 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் வேலூர் நகராட்சி மன்றத்துக்கு குடிதண்ணீர் திட்டத்துக்காக கடன், மானிய உதவிகள் எவ்வளவு வழங்கப்பட்டுள்ளன ?

(இ) அந்த வேலை எவ்வளவு முன்னேறி உள்ளது ?

(உ) அது எப்போது முடிவுறும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No loan or grant has been sanctioned in 1960.

(இ) It is reported by the Chief Engineer, P.W.D. (General), that out of the total length of 110,350 feet of pipes to be laid in the distribution system, a length of 61,380 feet has been laid so far and that action is being taken for the conversion of the existing filter beds into ground level service reservoir.

(உ) The scheme is expected to be completed in 1961–62.

*Tahsildars*

* 631 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்பட்ட பின்பு தாசில்தார், டிப்டி தாசில்தார் பதவிகள் அவசியமா ?

(இ) தாசில்தார்களின் பொறுப்பை பஞ்சாயத்து யூனியன்கள் வசம் விடுவதுபற்றி சர்க்கார் ஆலோசிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : ரெவின்யூ இலாக்காவானது பழைய காலம்தொட்டு இருந்துவருகிற ஒரு இலாகா இந்த இலாகாவைக் கலைத்துவிட்டு சமுதாயநல திட்டத்துடன் இணைத்தால் மக்களிடையே பீதி ஏற்படாதா ? இதை சர்க்கார் உணர்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் பதில் கொடுத்ததில் அப்படிக் கலைப்பதாகச் சொல்லவில்லை.

SRI C. MUTHIAH : தாசில்தார் வேலைக்கு வருவதற்கு முன்பு பஞ்சாயத்து யூனியனில் கமிஷனராக ஒரு ஆண்டு காலம் வேலை பார்த்த பிறகுதான் தாசில்தாராக வரவேண்டும் என்ற நிலையை அரசாங்கம் ஏற்படுத்துமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சில இடங்களில் தான் பஞ்சாயத்து யூனியன் ஏற்பட்டிருக்கிறது. இதை நிபந்தனையாக ஏற்படுத்துவதற்கில்லை. சில யூனியன்கள்தான் இப்பொழுது வேலை செய்துவருகின்றன. இந்தக் கேள்வி சரியான சமயத்தில் இல்லை. பதில் சொல்லவும் இது சரியான சமயம் அல்ல.

7th March 1961]

**Sri V. SUBBIAH :** இப்பொழுது முக்கியமான இனங்கள் பஞ்சாயத்துக்கு வருவதால் இந்த நிலவரி தாசில்தார் இருக்க வேண்டியது அவசியமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இப்பொழுது நிறைய வேலை இருக்கிறது. போகப்போக அவசியமா என்பதை அப்போது பார்க்கலாம்.

**Sri C. MUTHIAH :** ஒவ்வொரு தாசில்தாரும் ஒரு ஆண்டு காலம் கமிஷனராக இருக்கவேண்டுமென்று சென்றவாரம் சர்க்கார் உத்திரவு போட்டிருக்கிறது. பிளாக் டவலப்மெண்ட் ஆபீசரை பஞ்சாயத்து யூனியனிலே கமிஷனராகப் போடுவதற்கு அரசாங்கம் யோசிக்குமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இப்பொழுது பிளாக் டெவெலப்மென்ட் ஆபீசர்தான் கமிஷனராக வேலை செய்கிறார்.

**Sri A. GOVINDASAMY :** புதிதாக வரும் பஞ்சாயத்து யூனியனிலே கமிஷனராக, தாசில்தாராகவும், டெப்டி தாசில் தாராகவும் உள்ளவர்கள் நியமிக்கப்படுவதற்கு வசதி இருக்கிறது. இதர இலாக்காவில் இருப்பவர்களையும் நியமிக்க அரசாங்கம் யோசிக்குமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** கனம் அங்கத்தினர் சொல்கிறபடி வசதி இருப்பதாகத் தெரியவில்லை.

### *Fodder*

* 632 *Q.*—**Sri A. VEDARATHNAM :** கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்திற்கான தீவன-மேய்ச்சல் வசதிக் கமிட்டி அண்மையில் திருத்தி அமைக்கப்பட்டதா ?

(இ) இம்மாநிலத்தில் கால்நடைகளின் தீவன-மேய்ச்சல் வசதியைப் பெருக்க அரசாங்கம் என்ன திட்டமிட்டிருக்கிறது ?

(உ) புதிதாய் ஆரம்பிக்கப்பட்டு வரும் கோசாலைகளுக்கு மேய்ச்சல் வசதிக்காக ஏதேனும் வகை செய்யப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** (*a*) Yes, Sir.

(*b*) The following are the schemes formulated by this Government for the development of fodder and grazing facilities for cattle :—

(1) Creation of fodder banks and improvement to grazing over about 12,500 acres in the Reserved Forests;

(2) Development of fodder and pasture over about 15,000 acres in the Reserved Forests;

(3) Scheme for granting subsidy to State Farms for intensive development of pastures;

(4) Establishment of pasture demonstration plots;